Regd. No. TN/MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (O) P.P. 55



**நச்சுக்கருவி**

பதுக்கி வைத்து விலையை ஏற்றி விற்கும் வியாபாரிகள், நாட்டை நாசமாக்கும் நடமாடும் நச்சுக்கருவிகள்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**நிர்வாகம்**

ஒரு பொறுப்பை நிர்வகிப்பது என்றால், எல்லோருக்கும் சம உரிமை தந்து அது மறி போகாமல் சம நீதியின்படி நடத்தலாகும்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 7-7-1984 சனி வெளியீடு 8-7-1984 ஞாயிறு இதழ்: 261

## கோர்ட் உத்தரவுப்படி கருணாநிதி கைதானபோது

## போலீஸ்காருக்கு தீ வைத்து - கல்வீசி ரகளை

# தி.மு.க. காலித்தனம்

## போலீசாரைகொல்லமுயற்சி: உதவிகமிஷனர் உட்பட 6பேர் படுகாயம்

**சென்னை, ஜூலை 7- நீதிமன்றம் அனுப்பிய சம்மனை வாங்க மறுத்த கருணாநிதி மாஜிஸ்திரேட் உத்தரவின்படி கைது செய்யப்பட்டதும் தி.மு.க. வினர் காலித்தனத்தில் இறங்கினா போலீஸ்காருக்கு தீயிட்டு போலீசாரை எரித்து கொல்ல முயன்றனர்.**

### கருணாநிதி மகன் காலித்தனம்

கருணாநிதியிடம் சம்மனை கொடுத்து அவரை கைது செய்ய ரகசிய போலீஸ் உதவிக் கமிஷனர் தசரதராமன் இன்று காலை கருணாநிதியின் கோபாலபுரம் வீட்டிற்குச் சென்றார்.

வீட்டிற்குள் சென்ற உதவிக் கமிஷனர் தசரதராமனை, கருணாநிதியின் மகன் மு.க. ஸ்டாலின் வாய்க்கு வந்தவாறு திட்டினார்.

கை முஷ்டியை ஓங்கியவாறு ஓடிவந்த ஸ்டாலின் உதவிக் கமிஷனர் தசரதராமனின் முகத்தில் ஓங்கி குத்தினார்.

இதை அங்கிருந்த கருணாநிதியும்மற்றவர்களும் வேடிக்கை பார்த்தவாறு இருந்தனர்.

பால் கமிஷன் அறிக்கை திருட்டு சம்பந்தமாக நீதிமன்றத்திற்கும் கருணாநிதிக்கும்உள்ளபிரச்சினையில் மாஜிஸ்திரேட் உத்தரவின்படி கருணாநிதி கைதுசெய்யப் பட்டார்.

கோபால புரத்தில் உள்ள அவரது பங்களாவுக்கு போலீசார் சென்று கோர்ட் உத்தரவைக் காண்பித்து கருணாநிதியை அழைத்துச் சென்றனர்.

அப்போது வெளியே நின்றிருந்த போலீசாரை தயாராக வைக்கப்பட்டிருந்த தி.மு.க.குண்டர் தாக்கினார்கள்.

ரமாரியான கல் வீச்சிலும் தி.மு.க. வினர் இறங்கினர்.

அங்கு சென்றிருந்த போலீஸ் உதவி கமிஷனர் ஒரு சப் இன்ஸ்பெக்டர் 4 போலீசார் ஆகியோர் படுகாயமுற்றனர்.

### பெட்ரோல் ஊற்றி தீ

அங்கு நின்ற போலீஸ்காருக்கு தி.மு.க.வினர் பெட்ரோல் ஊற்றி தீயிட்டு கொளுத்தினர்.

போலீஸ்காரர்களை உயிருடன் எரிக்கும் முயற்சியிலும் தி.மு.க. வினர் ஈடுபட்டனர்.

தீ அணைக்கும் படையினர் விரைந்து வந்து காரில் பற்றிய தீயை அணைத்தனர்.

கல்வீச்சில் காயமுற்ற போலீசார்ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றனர்.

வன்முறை காரணமாக தி.மு.க. குண்டர்கள் 12 பேரை ராயப்பேட்டை போலீசார் கைது செய்தனர். மேலும் சிலரைத் தேடி வருகிறார்கள்.

### பெண் படுகாயம்

சென்னைகோபாலபுரத்தில் இன்று காலை திமுக. குண்டர்கள் வன்முறையில் ஈடுபட்டு கல்வீச்சு நடத்தினர்.

இந்த கல்வீச்சில் ஏழுகிணறைச் சேர்ந்ததையல் நாயகி வயது 46படுகாயம் அடைந்தார்.

தலையில் பலத்த காயத்துடன் இவர் சென்னை பொதுமருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்

கிராம ஊழியர்கள்

## 30,000பேருக்கு ஊதிய உயர்வு

**தலா ரூ. 100 கூடுதலாக பெறுவார்கள்**
**அமைச்சர் எஸ்.டி.எஸ். அறிவிப்பு**

**சென்னை, ஜூலை 7- 30 ஆயிரம் கிராமப்பணியாளர்களுக்கு 100 ரூபாய் ஊதிய உயர்வு முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவின் பேரில் வழங்கப்பட்டுள்ளது அமைச்சர் எஸ்.டி.எஸ். இந்த ஊதிய உயர்வை அறிவித்தார்.**

தமிழகத்தில் உள்ள கிராமங்களில் கிராம நிர்வாக அதிகாரியின் கீழ் பணியாற்றும் கிராம காவலர், கிராம பணியாளர் கிராம பாசன பணியாளர் ஆகியோருக்கு தமிழக அரசு தலா ரூ. 100 ஊதிய உயர்வு அளித்துள்ளது.

முன்பு வெட்டியான், தலையாரி என்று அழைக்கப்பட்ட இவர்களை கிராமபணியாளர், கிராம காவலர், கிராம பாசன பணியாளர் என்று முதல்வர் புரட்சித் தலைவர் அரசு மாற்றம் செய்திருப்பது தெரிந்ததே.

இந்தபணியாளர்களுக்கு 20 அகவிலைப்படி உயர்வுகளை இம்மாதம் வழங்குவதாக அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவித்தார்.

இதுபற்றி அமைச்சர் எஸ். டி. எஸ். நிருபர்களிடம் கூறியதாவது:-

இன்று கிராமபணியாளர்கள் தமிழகத்தில் மட்டும் 30 ஆயிரம் பேர் இருக்கிறார்கள்.

1980ம் ஆண்டு ஜூலை மாதம் முதல்இவர்களுக்கு வழங்க வேண்டிய 20 அகவிலைப்படி உயர்வுகளும் இம்மாதத்தில் வழங்கப்படும்.

இந்த ஊழியர்கள் மதிப்பூதியமாக தற்போது 140 ரூபாய் பெற்று வருகிறார்கள்.

இப்போது வழங்கப்படும் 20 அகவிலைப்படி உயர்வுகளையும் சேர்த்து

(2-ம் பக்கம் பார்க்க)

### பால்கமிஷன் அறிக்கை திருட்டு வழக்கு

## நீதிபதி உத்தரவுப்படி கருணாநிதி கைதாகி கோர்ட்டில் ஆஜர்

### 'ஆகஸ்ட்25ந்தேதி விசாரணைக்கு வராவிட்டால் மீண்டும் கைது'- நீதிபதி கண்டிப்பு

**சென்னை, ஜூலை 7- பால்கமிஷன் திருட்டு வழக்கு சம்பந்தமாக நீதிபதி பிறப்பித்த உத்தரவின்படி திமுக தலைவர் கருணாநிதி கைது செய்யப்பட்டு கோர்ட்டில் ஆஜர்படுத்தப்பட்டார் வழக்கு விசாரணை ஆகஸ்ட் 25.க்கு ஒத்திவைக்கப்பட்டது 25-ம் தேதி கோர்ட்டுக்கு வராவிட்டால் இதேபோல் கொண்டுவரப்படுவீர்கள் என்று நீதிபதி குறிப்பிட்டார்,**



பால்கமிஷன் அறிக்கையை அரசு வெளியிடுவதற்கு முன்னால் அந்த அறிக்கையை திருடி வெளியிட்டதாக தி. மு. க. தலைவர் கருணாநிதி, முரசொலி செல்வம், கருணாநிதியின் உதவியாளராக இருந்த சண்முகநாதன் அதிகாரி சதாசிவம் ஆகியோர் மீது வழக்கு தொடரப்பட்டு இருக்கிறது.

இந்த வழக்கு தொடர்பாக சம்மனை வாங்க கருணாநிதி மறுத்து கோர்ட்டுக்கு வராமல இருந்து வருகிறார்.

சம்மனை வாங்காமல் கோர்ட்டுககு வராமல் இருந்து வருவதால் கருணாநிதியை கைது செய்ய வாரண்ட் பிறப்பிககப்பட்டு இருந்தது.

பால் கமிஷன் அறிக்கை திருட்டு சம்பநதமான வழக்கு இன்றுகோர்ட்டில் வருவதாக ஏற்கனவே அறிவிக்கப்பட்டு இருந்தது இந்த வழக்கு சம்பந்தமாக திமுக தலைவர் கருணாநிதியை கைது செய்ய மத்திய ரகசிய போலீசார் கருணாநிதி வீட்டுக்கு இன்று காலை 11மணிக்கு சென்றனர்.

கருணாநிதியை கைது செய்துநேராக எழும்பூரில் உள்ள கோர்ட்டுக்கு கொண்டுவந்தனர்.

எழும்பூரில் தலைமை மெட்ரோபாலிடன் மாஜிஸ்திரேட் ஆர். மாணிக்கம் முன்னிலையில் இந்த வழக்கு விசாரணைக்கு வந்தது.

கோர்ட் துவங்குவதற்கு முன்னரே அரசு தரப்பு பிராசுகியூட்டர் பத்மினி ஜேசுதுரை மற்றும் அரசு வழக்கறிஞர்கள் நாராயணன், சுந்தரராஜன் ஆகியோர் வந்து அமர்ந்திருந்தனர்.

மாஜிஸ்திரேட் வந்து அமர்நததும் இந்தவழக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

இந்தவழக்கு தொடர்பாக கருணாநிதிக்கு வாரண்டு பிறப்பிக்கப்பட்டதாஎனறுஅரசுவக்கீலிடம் மாஜிஸ்திரேட்கேட்டார்.

வாரண்டை அவர் வாங்க மறுத்து விட்ட

2-ம் பக்கம் பாரகக

## அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணி மாவட்ட நிர்வாகிகள் அறிவிப்பு

**அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணியின் மாவட்ட நிர்வாகிகளாக கீழ்க் கண்டவர்கள் கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு டாக்டர் புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் நியமிக்கப்படுகிறார்கள்.**

### சென்னை மாவட்டம்

துணைத்தலைவர்
**திரு. ஆதிராஜாராம் பி.ஏ.**
பாரதிதாசன் தெரு
குமரன் காலனி, சைதை சென்னை-600 015

துணைச்செயலாளர்
**திரு. ப. இராஜேந்திர சோழா,** எம். எஸ்ஸி, பி.எல்.
பேரக்ஸ் தெரு, ஏழுகிணறு, சென்னை-1

பொருளாளர்
**திரு. எம். ஏ. ராஜ்குமார்**
அங்கப்பநாயக்கன் தெரு, சென்னை.

### தென் ஆற்காடு மாவட்டம்

துணைச் செயலாளர்
**திரு. சிவசண்முகம்,** பி. எஸ் ஸி.
சொரத்தூர், பண்ருட்டி வட்டம்.

துணைத்தலைவர்
**திரு. இ. புகழேந்தி.** பி. ஏ., பி. எல்.,
புதுப்பாளையம், கடலூர்.

### தர்மபுரி மாவட்டம்

தலைவர்
**திரு கே.வி. இப்ராகீம்,**
ஊத்தங்கரைப் பகுதி

துணைத்தலைவர்
1. **திரு. எம். வடிவேலு பி. ஏ.,**
மேல தெரு, தர்மபுரி.
2. **திரு. கே. ஆர். ஆறுமுகம்,**
கிருஷ்ணகிரி அஞ்சல், தாமபுரி மாவட்டம்.

துணைச்செயலாளர்
1. **திரு. வி. இராமச்சந்திரன்** பி.எஸ்ஸி,
பெண்ணகரம் ரோடு, பாப்பாரப்பட்டி அஞ்சல்,
2. **திரு. சர்க்கரை ஆலை மாது,**
சர்க்கரை ஆலை தொழிற்சங்கம்
பாலக்கோடு பகுதி

பொருளாளர்
**திரு. தம்பி டி.எம். வெங்கடாசலம்**
கூட்டுறவு காலனி, கிருஷ்ணகிரி

### சேலம் மாவட்டம்

துணைத்தலைவர்
**திரு. சி. முருகேசன், எம். ஏ. பி. எல்.**
சன்னியாசி குண்டு அஞ்சல், சேலம்-3
**திரு. அன்பரசு பி ஈ,**
கோபாலபுரம், ஆத்தூர் வட்டம்,

துணைச் செயலாளர்
1. **திரு. சேலம் எல். பி. யுவராஜ்** பி.எஸ்ஸி, எம எஸ்,
கோகுல நகர், சேலம்-4

(2-ம் பக்கம் பார்க்க)

அண்ணா பவளவிழா:

# 9-ந் தேதி சேலம் மாவட்டக் கழக ஆலோசனைகூட்டம்

சேலம், ஜூலை 7- அண்ணா பவளவிழா குறித்து ஆலோசிக்க 9-ந் தேதி சேலம் மாவட்டக் கழக ஆலோசனைக் கூட்டம் சேலத்தில் நடைபெறுகிறது.

இதுகுறித்து சேலம் மாவட்டக்கழக செயலாளர் கண்ணன் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

சேலம் மாவட்டக் கழக ஆலோசனைக் கூட்டம் வரும் 9 ந் தேதி (திங்கள்) காலை 10 மணி அளவில் அஸ்தம்பட்டி பயணியர் விடுதியில் நடைபெறுகிறது.

மாவட்ட அவைத் தலைவர் செம்மலை தலைமையில் நடைபெறும் இக்கூட்டத்தில் அண்ணா பவளவிழாவினை சிறப்பாக கொண்டாடுவது குறித்தும் மற்றும் கழக ஆக்கப் பணிகள் குறித்தும் விவாதிக்கப் படுகிறது.

கூட்டத்தில் ஒன்றிய நகர கழக செயலாளர்கள் பொதுக்குழு உறுப்பினர்கள், மாவட்ட பிரதிநிதிகள், மாவட்ட எம். ஜி. ஆர் மன்ற நிர்வாகிகள், மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி நிர்வாகிகள், மாவட்ட தொழிற்சங்க நிர்வாகிகள், மாவட்ட மாணவர் பிரிவு நிர்வாகிகள் மாவட்ட விவசாய பிரிவு நிர்வாகிகள் மகளிர் பிரிவைச்சர்ந்தவர்கள் மற்றும் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த அமைச்சர்கள் பொன்னையன், அருணாசலம், விஜயலட்சுமி மற்றும் திட்டக்குழு துணைத்தலைவர் பாவலர் முத்துசாமி அனைத்துலக எம். ஜி. ஆர் மன்ற பொருளாளர் எஸ். வி. வரதராசன், சட்டமன்ற உறுப்பினர்கள் ஆறுமுகம், தனபால், கிருஷ்ணராஜன் கணேசன், அருமை சிவப்பெருமாள், நாச்முத்து, சிவப்பிரகாசம், சி. வி. வேலப்பன், மாவட்டக்கழக இணைச் செயலாளர் கே. பி. செல்வராசு, மாவட்ட கழக பொருளாளர் கே. பி ராமலிங்கம் எம்-எல். ஏ மாவட்ட எம். ஜி. ஆர் மன்ற தலைவர் உஸ்சார் ரங்கசாமி தொழிற்சங்க செயலாளர் கபாடி பழனியப்பன் மாவட்ட தொழிற்சங்க பிரிவு துணைத்தலைவர் சண்முகம், மாணவர்பிரிவு நிர்வாகிகள் ஏ. சுப்பிரமணியன், முபன்னீர்செல்வம் மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி தலைவர் சி. ராமலிங்கம்செயலாளர் ராஜாமணி விவசாய பிரிவை சேர்ந்த மாவட்ட நிர்வாகிகள் கணேசன், பி ஆர் பொன்னுசாமி, அருணாசல பாபு, கவுண்டர் ராஜேந்திரபிரசாத், மகளிர் பிரிவை சேர்ந்த அனைவரும் கூட்டத்தில் தவறாது பங்கேற்று சிறப்பாக நடத்தி தருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

மாவட்ட கழக கூட்டம் முடிந்தபின் எல்லா ஒன்றிய கழக, நகரகழக கூட்டங்கள் நடைபெறும்.

இவ்வாறு கண்ணன் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

இம்மாதம் 15-16 தேதிகளில்

# காமராஜர்-முத்துராமலிங்கத்தேவர் பெயர்களில் புதிய மாவட்டங்கள்

## முதல்வர் புரட்சிதலைவர் தொடங்கி வைக்கிறார்

சென்னை. ஜூலை 7- தமிழ்நாட்டில் பெருந்தலைவர் காமராஜர், பசும்பொன் முத்துராமலிங்க தேவர் ஆகியோர் பெயரில் புதிய மாவட்டங்களை முதல்வர் புரட்சித்தலைவர் தொடங்கி வைக்கிறார். இதற்கான விழா வரும் 15,16 ஆகிய தேதிகளில் நடைபெறுகிறது.

தமிழ்நாட்டில் மாவட்ட நிர்வாகத்தை சிறப்பான முறையில் நடத்துவதற்கு வசதியாக பெரிய மாவட்டங்களை பிரிக்க தமிழக அரசு முடிவு செய்தது.

மாவட்டங்கள் அபிவிருத்தி அடையவும், நிர்வாக செம்மைக்காகவும் புதிய மாவட்டங்கள் அமைக்க முடிவு செய்யப் பட்டது.

இந்த அடிப்படையில் பெரிய மாவட்டங்களை இரண்டாக- மூன்றாக பிரிக்க திட்டமிடப் பட்டது.

இப்போதுள்ள 16 மாவட்டங்களில் இருந்து புதிய மாவட்டங்கள் 7 உருவாக்க முடிவுஎடுக்கப் பட்டுஉளளது.

அதன்படி ராமநாதபுரம் மாவட்டம் 3 மாவட்டங்களாக பிரிக்கப்படுகிறது.

தற்போதுள்ள ராமநாதபுரத்தை தலைமையிடமாகக் கொண்டு ராமநாதபுரம் மாவட்டம் செயல்படும்.

விருதுநகரைத் தலைமையிடமாகக் கொண்டு பெருந்தலைவர் காமராஜர் மாவட்டம் அமைக்கப் படும்.

### தனி அதிகாரி நியமனம்

சிவகங்கையைத்தலைமையிடமாகக் கொண்டு பசும் பொன் முத்துராமலிங்கத்தேவர் மாவட்டம் அமைக்கப் படும்.

இந்த மாவட்டங்களை மாற்றி அமைக்க ஐ. ஏ. எஸ், பதவி அந்தஸ்துள்ள தனி அதிகாரிகள் நியமிக்கப்படுவார்கள்.

பெருந்தலைவர் காமராஜரது பிறந்தநாள் இம்மாதம் 15ம் தேதி வருகிறது.

காமராஜர் பிறந்த நாளில் காமராஜர் பெயரில் புதிய மாவட்டத்தை துவக்கிவைக்க முதல்வர் புரட்சித் தலைவர் விரும்பி இந்தப் புதிய மாவட்டத்தைத் தொடங்கிவைக்கிறார்.

புது மாவட்டங்கள் அமைப்பதற்கான தொடக்கவிழா வருகிற 15 16 ஆகியதேதிகளில் நடைபெறும். ராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை ஆகிய 3 இடங்களிலும் இந்த விழா நடைபெறும்.

முதல்வர் புரட்சித் தலைவர் இந்தப் புதிய மாவட்டங்களைத் தொடங்கிவைக்கிறார்.

இவ்விழாவில் மத்திய அமைச்சர் வெங்கட்ராமன் கலந்து கொள்கிறார்.

## அமைச்சர் எஸ் டி. எஸ் அறிவிப்பு..

(1 ம் பக்கத் தொடர்ச்சி

இனிமேல் இவர்களுக்கு 240 ரூபாய் கிடைக்கும்.

இதனால் கூடுதலாக 9½ கோடி ரூபாய் செலவாகும் ஆண்டு தோறும் அவர்களுக்காக 3 கோடியே 71 லட்ச ரூபாய் சம்பள உயர்வுக்காக செலவு ஆகும்.

### ரூ. 5.5 கோடி வழங்கல்

இந்த 30 ஆயிரம் ஊழியர்களுக்காகவும் நிலுவைத் தொகையாக 5 கோடியே 80 லட்ச ரூபாய் அரசு வழங்குகிறது.

இந்த ஊதிய உயர்வு தொகை மற்றும் நிலுவை தொகை அனைத்தும் இம்மாத சம்பளத்தில் சேர்ந்து கிடைக்கும்

இவ்வாறு அமைச்சர் எஸ், டி. எஸ். கூறினார்.

ஏற்கனவே இந்த ஊழியர்களுக்கு பணிக்கொடை அளிப்பது என்று அரசு அறிவித்துள்ளது தெரிந்ததே.

ஒய்லா சார்பில்

## நலிந்தோருக்கு கடன் வழங்கும் விழா

சென்னை, ஜூலை, 7- 'ஒய்லா' மகளிர் அமைப்பின் சார்பில் 150 பெண்கட்கு கடன் வழங்கு விழா மகளிர் சங்க பொது செயலாளர் கே. மரியம் தலைமையில் நடந்தது.

சமூகநலத் துறைதனி அதிகாரி கமலா மாதவன் கடன்களை வழங்கினார்.

இந்த நிகழ்ச்சியில் 'ஜெராக்ஸ்' நகல் எடுக்கும் எந்திரம்வாங்குவதற்கான 23 ஆயிரத்து 600 ரூபாய் கடன் உதவியும் பத்மா என்ற பெண்ணிற்கு வழங்கப்பட்டது இந்த கடன் உதவியை பம்மல் இந்தியன் ஓவர்சீஸ் வங்கி வழங்கியது எஸ். விஜயகுமாரி நன்றி கூறினார்.

# ரோடு போடாமலே ரூ. 70 ஆயிரம் சுருட்டிய தி. மு. க. பிரமுகர்

## ஊழல் கோஷம் போடும் கருணாநிதி கும்பலின் முகமூடி கிழிகிறது

திருச்சி. ஜூலை. 7. ரோடு போடாமலே ரூ. 70 ஆயிரம் பில் போட்டு பணம் எடுக்கப்பட்டுள்ளது. இந்த காரியத்தை செய்தவர் தி. மு க. பிரமுகராவார் அடிஷனல் கலெக்டர் இதை கண்டுபிடித்தார்.

அரியலூர் பகுதியில் உள்ள கருவடச்சேரியிலிருந்து அருங்கால் எறை கிராமத்திற்கு ரோடுபோடும்பணிக்கு காண்ட்ராக்ட் விடப் பட்டது.

அரியலூர்பகுதி தி மு க. பிரமுகர் தங்கவேல்உடையார் அந்த வேலையை காண்ட்ராக்ட் எடுத்தாராம். அவர் சட்டமன்ற தி மு க. உறுப்பினருக்கு மிக நெருங்கிய நண்பர் என்றும் கூறப்படுகிறது.

ரோடு சம்பந்தப்பட்ட வேலை செய்யாமலே வேலை செய்ததாக ரூ. 70 ஆயிரம் வரை பணம் பெற்றதாகக் கூறப்படுகிறது.

திருச்சி மாவட்டத்தில் வெள்ள நிவாரணப் பணிகளை கவனிப்பதற்காக முதல்வர் புரட்சித் தலைவர் நியமித்த அடிஷனல் கலெக்டர் கலைவாணர் இதை அறிந்து அங்கு சென்று சோதனை நடத்தினார். ரோடுவேலை எதுவும் நடக்க வில்லை.

இதுபற்றி மாவட்ட ஆட்சித்தலைவரிடம்அவர் புகார் செய்தார். கலெக்டர் விஸ்வநாதன் இது குறித்து மேல்நடவடிக்கை எடுத்து வருகிறார்.

சிம்சன்தேர்தல்,

## தி. மு. க. படுதோல்வி

சென்னை, ஜூலை 7- சிம்சன் தொழிற்சங்கத் தலைவர் தேர்தலில் உழைக்கும் மக்கள் மாமன்றத்தைச் சேர்ந்த ஆர். குசேலர் தேர்ந்தெடுக்கப்பட்டார். திமுக சார்பில் போட்டியிட்ட டி. பி. மூர்த்தி படுதோல்வி அடைந்தார்.

ஓட்டுவிவரம் வருமாறு:

ஆர். குசேலர்:

ஊழியர் பிரிவு - 3744

அலுவலர் பிரிவு-1515

டி. பி. மூர்த்தி

ஊழியர் பிரிவு 992

அலுவலர் பிரிவு 253

## கருணாநிதி கைது

(1ம் பக்கத் தொடர்ச்சி)

தால் போலீசார் கருணாநிதியை கைது செய்து அழைத்து வந்து இருப்பதாக பத்மினி ஜேசுதுரை கூறினார்,

அப்போது கருணாநிதி கோர்ட்டில் ஆஜர்படுத்தப் பட்டார்

பால்கமிஷன் வழக்கு பற்றிய புகார் நகல் கருணாநிதியிடம் தரப் பட்டது. ஆனால் அதை அவர் வாங்க மறுத்து விட்டார்

கருணாநிதியை ரிமாண்டு செய்ய வேண்டுமா என்று மாஜிஸ்திரேட் கேட்டார்.

இது பற்றி கோர்ட்டே முடிவு செய்யவேண்டும் என்று பத்மினி ஜேசுதுரை கூறினார்.

சி. ஆர், பி. சி. 88-வது பிரிவின் கீழ் கருணாநிதியை வெளியேவிடுவதாக மாஜிஸ்திரேட் உத்திரவிட்டார். அடுத்த விசாரணைக்கு கோர்ட்டுக்கு வர வேண்டும் என்றும் உத்தரவிட்டார்.

அப்போது கருணாநிதி எழுந்து நானாக கோர்ட்டுக்கு வரவில்லை. போலீசார் கைது செய்து அழைத்து வந்தனர். அடுத்தமுறையும் நானாக வரமாட்டேன். அப்படி வருவதாக இருந்தால் இதே போல் தான் வருவேன் என்றார்.

அப்போது மாஜிஸ்திரேட் குறுக்கிட்டு அந்த நிலைக்கு வர வேண்டாம் நீங்கள் ஆஜராகுங்கள் என்றார்.

இதன் பிறகு கருணாநிதி கோர்ட்டில் பாவேந்தர் பாரதிதாசன் பாடல் ஒன்றைப்படித்தார்.

அப்போது மாஜிஸ்திரேட் குறுக்கிட்டு அந்த கவிதையை கோர்ட்டும் அறியும என்றார்.

இதன் பிறகு இந்த வழக்கு விசாரணை ஆகஸ்ட் 25 ம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டுள்ளதாக மாஜிஸ்திரேட் மாணிக்கம் அறிவித்தார்.

அப்போதும் நான் வர மாட்டேன் என்றார் கருணாநிதி.

மாஜிஸ்திரேட்:-நீங்கள் கண்டிபாக வரவேண்டும் அப்படி வரவில்லை என்றால மீண்டும் இதே போல்உங்களை அழைத்துக் கொண்டுவருவார்கள்,

## மாவட்ட நிர்வாகிகள் அறிவிப்பு (முதல் பக்கத் தொடர்ச்சி ...)

2. திரு. எஸ். அன்பழகன், பி. ஏ.

வீசாணம் அஞ்சல், நாமக்கல்

3. திரு. ஆர். சிவஞானம், பி. ஏ.,

மேற்கு காலனி, குமாரபாளையம்

பொருளாளர்

திரு. எம். எஸ். குமணன். பி.காம்.,

குமாரபாளையம் அஞ்சல், சேலம் மாவட்டம்

### கோவை மாநகர் மாவட்டம்

தலைவர்

திரு. சிங்கை மா. நடராசன், எம். ஏ., பி.எல்.,

விமான நிலையம் அஞ்சல், கோவை.

துணைத்தலைவர்

1. திரு. காட்டூர் கா. சண்முகம்,

பார்க்வீதி, காட்டூர்.

2. திரு. இ. இளையநம்பி.

காந்திபுரம், கோவை

செயலாளர்

திரு. தா. மலரவன்,

அன்சாரி தெரு ராம்நகர் கோவை.

துணைச் செயலாளர்

திரு. சிங்கை எஸ். பாலன்,

உப்பிலிபாளையம் அஞ்சல், சிங்காநல்லூர்.

2. திரு கோவை க. புரட்சித்தம்பி

உடையாம்பாளையம்

திரு. கே சி பழனிசாமி பி. ஈ.,

வேளாண்மை பல்கலைக்கழகம் கோவை

பொருளாளர்

டாக்டர் டி. கே. நித்தியானந்தம், எம். பி, பி. எஸ்.,

சாஸ்திரி வீதி, வெள்ளலூர்

### கிழக்கு தஞ்சை மாவட்டம்

துணைத்தலைவர்

திரு. எம். இராசேந்திரன்.

குடவாசல் அஞ்சல் தஞ்சை

துணைச்செயலாளர்

திரு ஜே அர்ச்சுனன் பி ஏ. பி எல்,

பைங்காட்டூர் அஞ்சல், கோட்டூர் ஒன்றியம், திருத்துறைப்பூண்டி தொகுதி

2. திரு. எஸ். நாகராசன்,

மேலகோட்ட வாசல, பெரம்புக்காரத் தெரு, நாகப்பட்டினம்.

பொருளாளர்

திரு. என். மௌலா அபூபக்கர்

நாகூர் நகர்

எஸ். திருநாவுக்கரசு

செயலாளர்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணி

சென்னை-14
7-7-84

## நமது மேடை

### ஆயிரம் விளக்கு

சென்னை ஆயிரம்ஆண்டு மாடல் பள்ளி சாலையில் இன்று (7- ந்தேதி) மாலை 7 மணிக்கு கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்தில் ஜேப்பியார் எம். எல். சி. அங்கமுத்து எம். எல். சி. மதுரை இளவரசன், என். வி. என். செல்வம், நாஞ்சில் மணிமாறன் ஆகியோரும் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

### மணலி

நாளை 8ந் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணியளவில் மணலி கடைத் தெருவில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெறவிருக்கிறது.

ஜி. தெட்சிணாமூர்த்தி தலைமை வகிக்கும் இக் கூட்டம் எம் செல்வராஜ் முன்னிலையில் நடைபெறுகிறது. மணலி சி. கே சிதம்பரம் அனைவரையும் வரவேற்பார்.

பலகுரலரசு நள்ளாற்று நடராசன், எம். எஸ். மாணிக்கம் எம். எல். ஏ. மாவட்டச் செயலாளர் எம். மகாலிங்கம் ஒன்றிய பொறுப்பாளர் எம. வி. நாகராசன் கவிஞர் த. உதயகுமார் தலைஞாயிறு ஒன்றிய செயலர் ஓ. எஸ் மணியன் நகர செயலர் ஆர். திருச்செல்வம் ஆகியோர் சிறப்புரையாற்றுவார்கள்மேலும் இக்கூட்டத்தில் பலர் கலந்துகொண்டு பேசுவர். கே. திருவேங்கடம் நன்றியுரை யாற்றுவார்.

### கொள்ளம்பாளையம்

பெரியார் மாவட்டம் கொள்ளம்பாளையம்டாக்டர் அம்பேத்கார் திடலில் வரும் 9ந் தேதி மாலை 6 மணிக்கு கழகக் கூட்டம் நடைபெறுகிறது. கூட்டத்தில் பொத்தனூர் மணிமாறன், செங்கோட்டையன் எம். எல். ஏ., சின்னசாமி எம். பி., பவானி பழனியம்மாள், இ. எம். ராமசாமி, ஞான சம்பந்தன் உள்ளிட்ட பலர் பங்கேற்று பேசுகின்றனர்.

பி. குருசாமி தலைமையில் நடைபெறும் இந்தக் கூட்டத்திறகு அ. க துரைராசு வரவேற்புரையாற்ற க. எஸ். கணேசன் நன்றி கூறுகிறார்.

அண்ணாநகர் தி மு. க, தேர்தலை எதிர்த்து

## மேலும் ஐந்து வாக்காளர் வழக்கு

சென்னை, ஜூலை 7— சென்னை அண்ணாநகர் தொகுதியில் தி. மு. க. வேட்பாளர் ராமசந்திரனை எதிர்த்து சென்னை ஐகோர்ட்டில் அண்ணாநகர் தொகுதியை சேர்ந்த எப். ராஜ். ஆர். விஜயகுமார் எம். கிருஷ்ணமூர்த்தி என். செல்வம், கே. சந்திரசேகரன் ஆகிய வாக்காளர்கள் வழக்கு தொடர்ந்துள்ளனர்.

இந்த வாக்காளர்கள் சார்பில வக்கீல்கள். எஸ். நாகராசன், ரத்தினவேலு ஜான்சன், எ. வி முனுசாமி எஸ். வெங்கட்ராமன் கே. ஜெய்குமார் ஆகியோர் ஆஜராகிறார்கள்.

## அணுமின் சக்தி இலாகா ரீயாக்டர் ஆராய்ச்சி மையம் KARP திட்டம்

டெண்டர் எண்: RRC-KAPR-PEE - 83210 - 1R-2-84

திட்ட பொறியாளர் (மின்சாரம்) KARP திட்டம் ரீயாக்டர் ஆராய்ச்சிமையம், கல்பாக்கம், செங்கல்பட்டு மாவட்டம், தமிழ்நாடு அவர்களால்மத்தியபொதுப் பணித்துறை, ரெயில்வே மின்சார இலாகா, ஆகிய அரசு இலாக்காக்களின் அங்கீகரிக்கப்பட்ட பட்டியலில் உள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்து கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 23-7-84 பிற்பகல் 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது.

வேலைவிவரம்: ''கல்பாக்கம் அணுமின் சக்தி திட்டத்தில் 11 கே. வி. வெளிப்புற துணை ஸ்டேஷன் நிறுவி சோதனை செய்து இணைப்புகள் அளித்து மற்றும் கேபிள்கள் வேய்தல்''

எதிர்பார்க்கும் செலவு: ரூ. 83,016.00 டேவணித் தொகைரூ 2,075-00 செக்யூரிட்டி டெபாஸிட் ரூ. 8,300- அனுமதிக்கப்பட்ட காலம்- 3 மாதம் டெண்டர் பத்திரங்கள் மற்றும் இதர விவரங்கள் ஆகியவைஎழுத்து மூலமான விண்ணப்பத்தின் பேரில் 10-7-84 முதல் 16-7-84 வரை எல்லா அலுவலக நாட்களிலும் ரூ. 20-+விற்பனை வரி ரூ. 3-(திருப்பி யளிக்கப்பட மாட்டாது) சேர்த்து ரொக்கமாக அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்கவுண்ட்ஸ் ஆபீசர், ரீயாக்டர் ஆராய்ச்சிமையம், கல்பாக்கம், செங்கல்பட்டு மாவட்டம் அவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். டெண்டருடன் தகுதிச்சான்றிதழும் நிரந்தர வருமான வரி சான்றிதழும்இணைத்து அனுப்பவேண்டும்.

davp- 645(93)84

## ஏலவிற்பனை

1. MisrimallNagaraj&Co 168 14, எம்.டி. எச்.ரோடு சென்னை-49 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் 31-12-82 வரை) ஏலத்தேதி 23-7-84 அன்று பகல் 11 மணிக்கும், 2. Siramall Sowcar, 159 Demmellows ரோடு, சென்னை-12 (31-12-79-க்கு முன்பும் 24-8 82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 23-7-84 அன்றுமதியம் 1 மணிக்கும், 3 S. Fatheelal Jain 4, ஸ்டேஷன் ரோடு, Villivakkam, சென்னை-49 24 8 82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 23-7-84 அன்று மதியம் 3 மணிக்கும், 4. M. AbhayRaj Kothari, ½, East கலமண்டபம் ரோடு, ராயபுரம் சென்னை-13 24-8-82 முதல் 83 பிப்ரவரி வரை) ஏலத்தேதி 24-7-84 அன்று பகல் 11 மணிக்கும். (5) Gouthamehand Mahaveer Chand, 90. Demellows Road Madras 12 (24-8-82 முதல் 83 பிப்ரவரி வரை) ஏலத் தேதி 24-7-84 அன்றுமதியம் 1 மணிக்கும், (6) Babulal Mahendra Kumar, 18 5, டி.எச்.ரோடு, சென்னை-51 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் '83 பிப்ரவரி வரை) ஏலத்தேதி 24-7-84 அன்று மதியம் 3 மணிக்கும் 7) Rajkumar, & Co. 147, M.T H. Road, வில்லிவாக்கம், சென்னை-49 (24-8-82 முதல், 83 மார்ச்வரை) ஏலத் தேதி 25-7-84 அன்று பகல் 11மணிக்கும், 8) Mangilal& Company, 249 புரசைவாக்கம் ஹைரோடு, சென்னை-7 (31 12-79க்கு முன்பும் 24 8-82 முதல் '83 மார்ச் வரை) ஏலத்தேதி 25-7-84 அன்று மதியம் 2 மணிக்கும், (9) B. Mohanlal Surana 44, எண். எம் கே. தெரு, அயனாவரம், சென்னை-23, (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் (83 மார்ச் வரை) ஏலத்தேதி 25-7 84 அன்று மதியம் 3 மணிக்கும்.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை, வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M தரம்சந்த்ஜெயின் 150, சசிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலதேதிகளில் ஏலம் போடுவார்,

மருத்துவ பொறியியல் கல்லூரிகளில்

# மாணவர் சேர்ப்பு: நுழைவுத் தேர்வு முறையே சிறந்தது

### அனைத்திந்திய பல்வேறு பிரிவினர் அமைப்பு வரவேற்பு

சென்னை, ஜூலை 7- எவ்வித அரசியல் காரணங்களுக்காகவும் தொழில் பயில் கல்லூரிகளில் சேர நடத்தப்படவிருக்கும் நுழைவுத் தேர்வை கைவிடக் கூடாது என்று முதல்வர் புரட்சித்தலைவரை அனைத்திந்திய பல்வேறு வகுப்பினர் சம்மேளனம் கேட்டுகொண்டுள்ளது.

பொறியியல் மற்றும் மருத்துவக்கல்லூரிகளில் மாணவர்களை சேர்க்க நேர்முகப் பேட்டிக்கு பதிலாக நுழைவுத் தேர்வு நடத்தப்படும் என்று முதல்வர் புரட்சித தலைவர் அறிவித்தது தெரிந்ததே.

இனி அரசியல் ஆதாயம் தேட முடியாதே என்று ஆத்திரம் கொண்ட கருணாநிதி மற்றும் வீரமணி கோஷ்டியார் நுழைவுத் தேர்வுமுறையை எதிர்த்து வருகிறார்கள்.

எனினும் பெரும்பாலான அரசியல் தலைவர்களும், பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்களும் நுழைவுத்தேர்வுமுறையை ஆதரித்து வரவேற்றுள்ளனர்.

அனைத்திந்திய இதர வகுப்பினர் சம்மேளனத்தின் மாநில செயற்குழு கூட்டம் வி. குப்புராவ் தலைமையில் நடந்தது.

நுழைவுத் தேர்வு முறையை எதிர்க்கும் பிற்போக்கு சக்திகள் தங்களுடைய ஆட்சிக் காலத்தில் நேர்முகப் பேட்டி முறையில் தில்லுமுல்லு செய்ததை மறந்து விடக் கூடாது இந்த பிற்போக்கு சக்திகளுக்கு பணிந்து விடாமல் முதல்வர் புரட்சித்தலைவர் தைரியமாக நடவடிக்கை மேற்கொண்டு இருப்பதை பாராட்டுகிறோம் என்று கூட்டத்தில் ஒருதீர்மானம் நிறைவேற்றப்பட்டது

வீட்டுக்கு ஒருவருக்கு வேலை திட்டத்தை விரைந்து செயல் படுத்த வேண்டும் என்று மற்றொரு தீர்மானத்தில் கேட்டுக்கொள்ளப் பட்டது.

## ஆசிரியர் பேரவை வரவேற்பு

நுழைவுத்தேர்வு முறையை ஆதரித்து அனைத்திந்திய ஆசிரியர் பேரவை மாநிலபொதுச் செயலாளர் வி. இருதயராசன் அறிக்கை வெளியிட்டுள்ளார்.

தாழ்த்தப்பட்டோர், பிற்பட்டோர் ஆகியோருக்கு உரிய இட ஒதுக்கீடு குறையாது என அரசு அறிவித்த பிறகும் சிலர் போராட்டம் என அறிவிப்பது பித்தலாட்டம் ஆகும் என இருதயராசன் தெரிவித்துள்ளார்.

ஏழை மாணவ மாணவியருக்கு

## பட்டுராசன் இலவசநோட்டு புத்தகம் வழங்கினார்

மதுரை, ஜூலை 7- மதுரை புரட்சித்தலைவர் அன்புப் பாசறை சார்பில் ஏழை மாணவ மாணவியருக்கு இலவச நோட்டு புத்தகம் வழங்கும் விழா கடந்த 1ந் தேதி ஜவஹர் புரத்தில் நடைபெற்றது.

ஏ.ரா. ராசேந்திரன் தலைமையில் நடைபெற்ற இந்நிகழ்ச்சியில் மதுரை மேயர் பட்டுராசன் பங்கேற்று 300 ஏழைமாணவ மாணவியருக்கு இலவச நோட்டு புத்தகங்களை வழங்கினார்.

8 ந்தேதி நெல்லை

## மாஞ்சோலையில் ஜி. ஆர். எட்மண்ட் பேசுகிறார்

நெல்லை, ஜூலை 7- நெல்லை மாவட்ட அண்ணா தோட்டத் தொழிலாளர்கள் சங்க சார்பில்நாளை 8ம் தேதி காலை 8மணிக்கு மாஞ்சோலையிலும், 11 மணிக்கு நாலு முக்கிலும் 2 மணிக்கு ஊத்திலும் 4 மணிக்கு குதிரைவெட்டியிலும் கழகக்கூட்டம் நடைபெறுகிறது.

பேரவை துணைத் தலைவர்எஸ் நம்பிராஜன் தலைமையிலும், வீ சு. மணியன், பாலசுப்பிரமணியம், முன்னிலையிலும் ஆல்பிரட்தாஸ் வரவேற்பிலும் நடைபெறும் இக்கூட்டங்களில் டெல்லி சிறப்பு பிரதிநிதி ஜி. ஆர். எட்மண்ட், ஜான் வின்செண்ட் எம்.எல்.ஏ. முருகையாபாண்டியன், வி. சி. தம்பி, ஆம்பூர் செல்வராஜ், வி ஜி சுப்பிரமணியன், சுலதான் பாய், பழனி, பொன்னுதுரை, குட்டன், லூர்துமேரி, ஆண்டபெருமாள், அடலைக்கண், மாடசாமி, உட்பட பலர் பங்கேற்று பேசுகின்றனர் டி. சுவாமிநாதன் நன்றி கூறுகிறார்.

கடத்தல் விமானத்தில் இருந்த

# பயணிகளை மீட்க பாகிஸ்தான் உதவி: இந்தியா நன்றி

புதுடெல்லி, ஜூலை 7 சீக்கிய தீவிரவாதிகள் கடத்திச்சென்ற விமானத்தில் இருந்த பயணிகள் மற்றும் விமான ஓட்டிகள் பத்திரமாக டெல்லி திரும்பபாகிஸ்தான் அரசு உதவியதற்கு இந்திய அரசு தனது நன்றியையும் பாராட்டையும தெரிவித்துள்ளது.

காஷ்மீர் தலை நகரம் ஸ்ரீ நகரில் இருந்து கிளம்பிய இந்திய ஏர் பஸ் விமானத்தை 9 சீக்கிய தீவிரவாதிகள் லாகூருக்கு கடத்திச் சென்றதும் பின்னர் அந்த விமானம் விடுவிக்கப்பட்டதும் தெரிந்ததே

கடத்திச்சென்ற 9 தீவிரவாதிகளும் சரணடைந்தனர்.

விமானத்தில் இருந்த 255 பயணிகள் மற்றும் விமான ஓட்டிகள் அதிகாரிகள் 9 பேர் ஆகியோர் பத்திரமாகநேற்று பாகிஸ்தான் விமானம்மூலம் புது டெல்லி திரும்பினர்.

பயணிகளுடைய உறவினர் மற்றும் நண்பர்கள் அவர்களை மகிழ்ச்சியுடன் விமான நிலையத்தில வரவேற்றனர்.

பயணிகளும், விமான ஓட்டிகள் மற்றும் அதிகாரிகள் அனைவரும் பத்திரமாக புதுடெலலி திரும்ப உதவிய பாகிஸ்தான் அரசுக்கு இந்திய அரசு தனது நன்றியையும பாராட்டுதலையும் தெரிவித்தது.

### நிபந்தனைகள் நிராகரிப்பு

விமானத்தைக் கடத்திச் சென்ற தீவிரவாதிகளின் நிபந்தனைகளை இந்திய அரசு நிராகரித்தது.

தங்களுக்கு 20 கோடி ரூபாய் தரவேண்டும் சிறையில் இருக்கும்பிந்தரன் வாலேயின் உதவியாளர்கள் விடுவிக்கப்படவேண்டும், பஞ்சாபில் இருந்து ராணுவம் திரும்ப அழைக்கப்பட வேண்டும் என்பன போன்ற நிபந்தனைகளை கடத்தல் காரர்கள் கேட்டிருந்தார்கள். இந்த நிபந்தனைகளை இந்திய அரசு நிராகரித்தது.

கடத்தல்காரர்கள் அனைவரும் கைதுசெய்யப்பட்டுபாகிஸ்தானில வைக்கப்பட்டுள்ளனர். அவர்களை இந்தியாவுக்குக் கொண்டு வருவது பற்றி பின்னர் தீர்மானிக்கப்படும்.

சுமார் 20 மணி நேரம் கடத்தலகாரர்களுடன் சாமார்த்தியமாக பேச்சு வார்த்தை நடத்தி பாகிஸ்தான அதிகாரிகள கடத்தல் விவகாரத்தை வழிக்குக் கொண்டு வந்தனர்.

### வழக்கு

விமான கடத்தல் காரர்கள் பற்றி பாகிஸ்தான், இந்தியா ஆகிய இரு நாடுகளும் பேசி முடிவு செய்யும் என்று மத்திய வெளி விவகார அதிகாரி ஒருவர் கூறினார் ஏற்கனவே இது போன்றவிமானக்கடத்தல் சம்பந்தமாக கைது செய்யப்பட்டவாகள் இன்னும் பாகிஸ்தானில்தான் இருக்கிறார்கள். பாகிஸ்தான் நாட்டு சட்டவிதிமுறைகளின்படி அவர்கள் மீது வழக்கு தொடரப்பட்டுள்ளது. இதுகுறித்து இரு நாட்டு வெளி விவகாரத்துறை செயலாளர்களும் ஏற்கனவே பேச்சுவார்த்தை நடத்தியிருக்கிறார்கள்.

தற்போது கைது செய்யப்பட்டுள்ள சீக்கியதீவிரவாதிகள் பற்றிய விவகாரம் பற்றியும் இரு நாட்டு அதிகாரிகளும் ஆலோசனை நடத்துவார்கள்.

ஸ்ரீநகரில்இருந்துகடத்தி சென்ற 9 சீக்கிய தீவிரவாதிகளும் ஸ்ரீநகர், ஜம்மு சண்டிகார், ஆகிய இடங்களைச் சேர்ந்தவர்கள். அவர்களின் பெயர்களை பாகிஸ்தான் அரசு அறிவிக்க வில்லை. கடத்தல் காரர்களில் 2 பேர் 30 வயதைக் கடந்தவர்கள் மற்ற 7 பேர் 21 முதல் 25வயதுக்குட்பட்டவர்கள் ஆவர்.

## பாக்கியராஜ் ரசிகர்மன்ற செயற்குழு கூட்டம்

சென்னை, ஜூலை 7— சென்னை மாவட்ட பாக்கியராஜ் ரசிகர்மன்ற செயற்குழுகூட்டம்நாளை 8ந்தேதி ஞாயிறு காலை 9-மணி அளவில் அண்ணா சாலை தேவநேயப்பாவாணர் மத்திய நூலகக் கட்டிடத்தில் நடைபெறுகிறது.

சென்னை மாவட்ட தலைவர் எம். தங்க பாண்டியன் தலைமையில் நடைபெறும் இக்கூட்டத்தில் சிறப்பு அழைப்பாளர்களாக அகில இந்திய பாக்கிய ராஜ் ரசிகர்மன்ற தலைவர் பழனிச்சாமியும், பொதுச் செயலாளர் இளமுருகுவும் கலந்து கொள்கின்றனர்.

## கத்தியால் குத்தி முதியவர் கொலை

சென்னை, ஜூலை. 7. கிழக்குத் தாம்பரம் கணபதி புரத்தைச் சேர்ந்தவர் ரங்காச்சாரி வயது 60. இவரை அடையாளம் தெரியாத சிலர் கத்தியால் குத்தினர் ரங்காச்சாரி மரணம் அடைந்தார்.

நிலத்தகராறு இந்த கொலைக்கு காரணம் என்று தெரிகிறது. இது பற்றி போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள ரங்காச்சாரி 10குழந்தைகளின தந்தை.

# ராஜஸ்தான்-சுபலட்சுமி லாட்டரி முடிவுகள்

### ராஜஸ்தான்

புதுடெல்லி, ஜூலை 7- ராஜஸ்தான் லாட்டரியின் 94-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:—

முதல் பரிசு
ரூ. 2 லட்சம்
எல் 529197

இதே எணகள் உடைய மற்றவரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2-வதுபரிசு
தலா ரூ. 25 ஆயிரம்
என் 462745

3-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
எல் 161375 எம் 274454
என் 273399 பி 252516
கியூ 607443

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

4-வது பரிசு
தலா ரூ. 500
02726 52438 15581
69393 23914 72919
33503 80697 42912
91887

5 வது பரிசு
தலா ரூ 50
0425 5551 1312 6527
2444 7436 3396 8411
4216 9414

6-வது பரிசு
தலா ரூ. 20
0322 5215 1688 6312
2325 7585 3753 8515
4703 9266

7-வது பரிசு
தலா ரூ 10
019 516 101 604 216
764 324 892 443 959

ஆறுதல் பரிசு
தலா ரூ. 5
66 95 87 33 48

விற்பனையாளர் பரிசு
ரூ. 5 05

### கோல்டன் வீக்லி

கோல்டன் வீக்லி லாட்டரியின் 20 வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
ஜி ஓய் 620701

2-வது பரிசு
தலா ரூ.10 ஆயிரம்
ஜி டபிள்யூ 394733
ஜி எக்ஸ் 506483
ஜி ஓய் 486724
ஜி இசட் 491384

கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும்பரிசுஉண்டு.

3- வது பரிசு
தலா ரூ 500
44341 41633 23731
52408 33369 81664
23987 99844 50127
66934

4-வது பரிசு
தலா ரூ 20
5918 4926 2165 1492
6320 8445 8275 8043
7436 0834

5-வது பரிசு
தலா ரூ. 10
032 577 192 639 267
777 375 869 434 951

6-வது பரிசு
தலா ரூ. 5
020 101 010 133 046
188 077 144 051 111
066 194 205 327 264
332 247 311 225 347
235 391 270 370 440
565 488 517 448 581
400 536 427 483 410
526 620 735 677 740
627 723 672 721 621
786 666 720 857 928
853 908 819 973 885
935 878 990 825 970

### சுபலட்சுமி

சுபலட்சுமி லாட்டரியின் 269-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
தலா ரூ. 1 லட்சம்
எம் 306732
என் 831442
ஓ 881273

ஆறுதல் பரிசு
(தலா ரூ. 1000)
எம் 831442 881273
என் 306732 881273
ஓ 306732 831442

2-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
எம் 350470 பாண்டி
என் 838442 ஓ 724280

3-வது பரிசு
தலா ரூ. 1000
எம் வரிசை:-
558291 865927
914582 741099
694508 783487
878754

என் வரிசை:-
334287 949049 891620
951194 970626 700126
343498

ஓ வரிசை:-
975264 767212 773481
661985 752125 976045
696041

(கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.)

4-வது பரிசு
தலா ரூ. 500
35644 50139 51240
34626 40344 03705
80268 34044 33469
06240

5- வது பரிசு
தலா ரூ. 100
2608 4819 3642 2809
9053 7545 9387 9842
9746 1190

6 வது பரிசு
தலா ரூ 50
7444 8486 9337
1429 9142 0201
5127 8883 1089
8186

7-வது பரிசு
தலா ரூ 20
6447 3492 0689 3145
8221 4619 3139 8488
8422 8360

8-வது பரிசு
தலா ரூ. 10
548 269 098 038 722
370 887 440 738 697

## குடந்தை செல்வா-ரேவதி நிகழ்ச்சிகள்

9-ந் தேதி கல்லாத்தூர் 10- சோலைக்கவுண்டன் பாளையம் 11-நெல்லிக்குப்பம் 12-கடலூர் 15-செட்டிக்குளம், 16-வைர செட்டிபாளையம். 17, 18,19 பூம்புகார் தொகுதி.

## மேட்டூர் அணையில் நீர்மட்டம் 95 அடியாக உயர்வு

திருச்சி, ஜூலை. 7. மேட்டூர் அணையின் நீர்மட்டம் கிடு கிடுவென உயர்ந்து வருகிறுது.

இரண்டு நாட்களில் சுமார் 15 அடி உயர்ந்துள்ளது.

அணையில் நீர்மட்டம் நேற்று மாலை 95 அடியாக உயர்ந்தது.

அணையின் மொத்த கொள்ளளவு 120 அடியாகும்.

மேட்டூர் அணைக்கு தொடர்ந்து பெரும் அளவில தண்ணீர் வந்து கொண்டு இருக்கிற.

அணையில் இருந்து விநாடிக்கு 25ஆயிரம் அடி நீர் பாசனத்திற்கு விடப் பட்டுவருகிறது.



## தமிழ்நாடு குடிசை மாற்று வாரியம் டெண்டர் அறிவிப்பு

குடிசை மாற்று வாரியத்தில் தகுந்த வகுப்பில் பதிவு செய்துள்ள மற்றும் இதர இலாக்காக்களில் சம அந்தஸ்தில் (Equal Status) பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்தும் கீழ்காணும் வேலைக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் கீழ் குறிப்பிடப்பட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை வரவேற்கப்படுகின்றன.

| வ. எண் | வேலையின் பெயர் | வேலையின் உத்தேச மதிப்பு(லட்சங்களில்) | டேவணித் தொகை டெபாஸிட் |
|---|---|---|---|
| | (வியாசர்பாடி) எம்.ஜி.ஆர். நகரில் TD-1-82படி மாடி குடியிருப்பு பிளாக்குகள் கட்டுதல். | ரூ | ரூ |
| 1. | குருப் I (1ல் 36 வீதம் 2 பிளாக்குகள்) | 8-40 | 8,400- |
| 2. | குருப் II (1ல் 36 வீதம் 2 பிளாக்குகள்) | 8-40 | 8,400- |
| 3. | குருப் III (1ல் 36 வீதம் 1 பிளாக்) | 4-20 | 4,200- |

டெண்டர் குறிப்புகள்
கிடைக்கும் தேதி 8-8-84
டெண்டர் தேதி 9-8-84

டெண்டர் பத்திரங்கள் எல்லா அலுவலக நாட்களிலும் காலை 11 மணி முதல் மாலை 3 மணிவரை மேற்பார்வை பொறியாளர் அலுவலகம் தெற்கு வட்டம் குடிசை மாற்று வாரியம் ஈ.வே ரா. பெரியார் கட்டிடம் நெ 5. காமராசர் சாலை, சேப்பாக்கம் சென்னை-600005 அவர்களிடமிருந்து செட் ஒன்றுக்கு ரூ.60-+விற்பனை வரி+ சர்சார்ஜ் வீதம் செலுத்தியதற்கான சலானை செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

டெண்டர் குறிப்பின் விலையை செயற் பொறியாளர் டிவிஷன் III, குடிசைமாற்று வாரியம், கீழ்பாக்கம், சென்னை - 600010 அவர்கள் சார்பில் செலுத்தி அதற்கான ரசீதை செலுத்தவேண்டும். டெண்டர்கள மேற்பார்வை பொறியாளர். தெற்குவட்டம் அவர்களால் மேலே குறிப்பிடப்பட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3.05 மணிக்கு திறக்கப்படும்.

மேற்பார்வைபொறியாளர்
(தெற்கு)

சென்னை - 5
26-6-84

dipr-30085-84-36-SAS

PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor C, PARASURAMAN

## டாக்டர் பட்டம் பெற கருணாநிதி நடத்திய கொலைவெறி தாண்டவம்

# கொல்லப்பட்ட மகனை "மகன்" என்று சொல்ல அனுமதி மறுத்த கருணாநிதி

போலீசாருடன் மோதல்:

## பஞ்சாபில் பயங்கர தீவிரவாதி சுட்டுக் கொலை

சண்டிகார், ஜூலை 7— பஞ்சாப் மற்றும் டெல்லியில் பல்வேறு கொள்ளை, கொலை சம்பவங்களில் ஈடுபட்டுவந்த பயங்கர சீக்கிய தீவிரவாதி சுக்தேவ் சிங் நேற்று போலீசாரால் சுட்டுக்கொல்லப்பட்டார்.

இதர தீவிரவாதிகளுடன் ரோபார் மாவட்டத்தில் ஒரு பாலத்திற்கு வெடி வைக்க தீவிரவாதிகள் முயன்றபோது போலீசார் அவர்களை மடக்கிப் பிடித்தனர். அப்போது ஏற்பட்ட மோதலில் சுக்தேவ்சிங் கொல்லப்பட்டார்.

துப்பாக்கியால் இந்த தீவிரவாதிகள போலீசாரை தாக்கிய போது ஏற்பட்ட மோதலில் சுக்தேவ் சுடப்பட்டு இறந்தார்.

தீவிரவாதிகளையும் போலீசார் நேற்று கைது செய்தனர். அவர்களிடம் இருந்த துப்பாக்கிகள், பயங்கர ஆயுதம் வெடி குண்டுகள் ஆகியவற்றை போலீசார் கைப்பற்றினார்கள்.

### ஏல விற்பனை

1. HiraBai, 38, சாமராஜ் சாலை, நாராயண சாமி கார்டன், ஆர்,ஏ புரம் சென்னை.28 (31-12 79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 16 7-84 அன்று பகல் 11 மணிக்கும், 2. Champalal Mangilal & Co. No:643, பூந்தமல்லி ஹைரோடு. சென்னை- 30 (31-12 79க்கு முன்பும் 24 8 82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத் தேதி 16-7 84 அன்று மதியம் 1 மணிக்கும் 3. S. G. Gordhanlal & Co No 90, டி வி Puram சூளை மேடு சென்னை-94 24-8-82 முதல் ஜனவரி 83 வரை. ஏலத்தேதி 16-7-84 அன்று மதியம் 3 மணிக்கும், 4. K Mohanlal Jain, New No 114 பேப்பர் மில்ஸ் ரோடு சென்னை 82 (24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 17-7 84 அன்று பகல் 11 மணிக்கும், 5. R Baluram, 1823 பேப்பர் மில்ஸ் ரோடு, பெரவல்லூர் ஜவஹர் நகர், சென்னை -82 (24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 18 7-84 அன்று மதியம் 1 மணிக்கும் 6 M Umaraomull, 45, வில்லேஜ் ரோடு, சென்னை-34 (31 12 79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 18 7 84 அன்று பகல் 11 மணிக்கும், 7. D Bowrimal Chordia 191, வெள்ளாளத் தெரு, சென்னை— 84 (31-12 79க்கு முன்பும் 24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 17 7-84 அன்று மதியம் 1 மணிக்கும், 8. L S Jain, பிளாட் நம்பர் 80, பேப்பர் மில்ஸ் ரோடு பெரவல்லூர், சென்னை 82 (24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 17-7-84 அன்று மதியம் 3 மணிக்கும், 9. R MittalalJain 107, பேப்பர் மில்ஸ் ரோடு, சென்னை 82 24 8 82 முதல் மார்ச் 83 வரை ஏலத்தேதி 18 7 84 அன்று மதியம் 3 மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள, பொன் பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை 12ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்டுள்ள ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.

## அமைச்சர் பண்ருட்டியார் காட்டமான தாக்கு

சென்னை ஜூலை 7- கருணாநிதி ஆட்சியிலிருந்தபோது டாக்டர் பட்டம் பெறுவதற்காக மாணவன் கொல்லப்பட்டார். அந்த மாணவனை அவன் தகப்பனார் என் மகன் என்று கூறக் கூடாது என்று தடை போட்ட கொடுங்கோல் சண்டாளன் கருணாநிதி. அவர்தான் இப்போது சட்டம் ஒழுங்கு நீதி பற்றிப் பேசுகிறார் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

சென்னை 68 வது வட்ட பொன்மனச் செம்மல் எம். ஜி. ஆர். மன்றம் சார்பில் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டமும், கழகக் கொடியேற்று விழாவும் ஓட்டேரி செல்லப்ப முதலித் தெருவில் நடைபெற்றது.

கூட்டத்திற்கு மணியன் தலைமை வகித்தார். இக் கூட்டத்தில் மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். அப்போது அவர் கூறியதாவது:-

இந்த மேடையில் என்னிடத்தில் ஒரு கைக் கடிகாரத்தைக் கொடுத்து அதை மணியனிடம் வழங்கச் சொன்னார்கள். கைக் கடிகாரம் எப்பொழுதும் ஓடிக்கொண்டே இருக்கும் வினாடி முள் ஓடும் நிமிட முள் ஓடும்- நாள் முள்ளும் ஓடும்- அது எப்பொழுதும் ஓடிக்கொண்டே இருக்கும். அதே அளவுக்கு சுறுசுறுப்போடு கழகத் தோழர்கள் பணியாற்றிட வேண்டும். கடிகாரம் நின்றாலும் கழக- மன்ற மறவர்களின் பணி நிற்காமல் தொடர வேண்டும்

### பாலைவனத் தூறல்கள்

பாலைவனத்தில் சிறுசிறு தூறல்கள் விழுவதுண்டு. அதனால் அங்கு சிதறிக் கிடந்த ஓரிரண்டு விதைகள் முளைப்பதும் உண்டு. அதனால் அந்த விதைகள் முளைத்து மரமாகி வளர்ந்து விடுவதில்லை. சிறிது நேரத்திலேயே அது உலர்ந்து காய்ந்து சருகாகி காற்றில் பறந்து போய் விடுகிறது.

அதுபோல அண்ணா நகர் தொகுதியில் பாலைவனத்தில் விழுந்த தூறல் போல அதில் முளைத்த செடிபோல தி.மு.க.வின் வெற்றிவரும் 5,6 மாதங்களில் அடிக்கிற பொதுத் தேர்தல் எனும் காற்றில் எப்படி உலர்ந்து பறக்குமோ தெரியாது.

### இதென்ன விந்தை!

அண்ணாநகர் தொகுதியில் வெற்றி வாய்ப்பை நாம் இழந்ததாகக் கூறுகிறார்கள்.

குடும்பக் கட்டுப்பாடு வேண்டும் என்று எண்ணுகிற இந்த நேரத்தில் ஒரு நாடாளுமன்ற உறுப்பினர் வீட்டிலும் வேட்பாளராக நின்று வெற்றி பெற்றவர் வீட்டிலும் 40 30 ஓட்டுகள் என்று இருந்திருக்கின்றன என்பதைப்பார்க்கும் போது அடேயப்பா இத்தனை பேரா........ இதென்ன விந்தை என்று நாமே சந்தேகப்படுகிறோம்.

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு இடத்தில் வலிமைஉண்டு யானைக்கு நிலத்தில்பலம்- முதலைக்கு நீரில் பலம் அதுபோல இடைத்தேர்தலின் இடத் தேர்தலையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

1972 லிருந்து அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் எந்தத் தேர்தலிலும் அண்ணா நகரிலும், மயிலாடுதுறையிலும், தஞ்சையிலும் வெற்றி பெற்றது கிடையாது.

### வெற்றிவிழா யார் கொண்டாடுவது?

ஆனால் தஞ்சை எனும் தி. மு. க. கோட்டையில் முதலையை நீரிலேயே சந்திப்பது போல தஞ்சையிலே சந்தித்து நாம் வெற்றி பெற்றிருக்கிறோம். செல்வாக்கு நமக்கு அதிகரித்திருக்கிறதே தவிர குறையவில்லை.

வரும்பொதுத்தேர்தலில் அண்ணாநகரையும் - மயிலாடுதுறையையும் கழகம் கைப்பற்றுவது உறுதி.

வெற்றிவிழா நாம்எடுப்பதற்குப் பதிலாக கருணாநிதி கட்சியினர் விழா எடுக்கின்றனர். இப்படி ஒரு அரசியல் கட்சியா?

உலக மக்கள் அனைவரும் நம்மக்கள் அவர்களை நல்லவர்களாக வல்லவர்களாக ஆக்க வேண்டும் என எண்ணி சத்துணவு போடும் வள்ளல் புரட்சித் தலைவர்.

கருணாநிதி தன் பிறந்த நாளை எண்ணி கொண்டாடுகிறார். தன் பிறந்த நாளில் தான் பிச்சைக்கார திட்டம் என்று இப்படி ஏதாவது அறிவிப்பார் ஆனால புரட்சித் தலைவர் அண்ணா பிறந்த நாளில் புதுப்புது சரித்திர திட்டங்களை அறிவித்து செயல்படுத்துகிறார்.

### இலங்கை பிரச்சினை

இலங்கைப்பிரச்சினைக்காக கருணாநிதிபோராட்டம் நடத்தினார். இலங்கைப் பிரச்சினையில் அவருடைய ஆட்சிக்காலத்தில் எடுத்த நடவடிக்கை என்ன? தமிழகம் வந்த பண்டார நாயகாவை விமான நிலையம் ஓடோடி சென்று மாலைபோட்டு வரவேற்றவர் தானே கருணாநிதி?

இலங்கை அரசிடம் குட்டிமணி-ஜெகனபோன்றவர்களைப் பிடித்துக் கொடுத்தவர் தான் கருணாநிதி. ஆனால் புரட்சித்தலைவர் அப்படி யாரையும் ஒப்படைத்திருக்கிறாரா?

கச்சத்தீவைக் கொடுத்தபோது உடந்தையாக இருந்து செயல்பட்டவர் தானே கருணாநிதி?

இலங்கையில் தமிழர்கள் பட்ட அவதியை உலகம் அறியும் அளவுக்கு ஒரு தமிழகக்குரலை ஐ நா. மன்றத்தில் ஒலிக்கச் செய்தவர் புரட்சித் தலைவர்.

14 கட்சித் தலைவர்கள் கூட்டணியாம் இவர்களுக்கு எந்தக் கருத்திலும் ஒற்றுமை கிடையாது. இலங்கை மீது படை எடுக்க வேண்டும் என்கிறார் கருணாநிதி. அதை முட்டாள் தனம் என்கிறார் கல்யாணசுந்தரம். இது தான் தி.மு.க வின் கூட்டு!

### எதற்கு போராட்டம்?

இருபது கிலோ அரிசி கேட்டு போராட்டமாம்! தஞ்சையில் விளைந்த நெல்லை எல்லாம் இரவோடு இரவாக கேரளத்திற்கு கடத்திய கருணாநிதியா இருபது கிலோ அரிசி கேட்பது?

அண்ணா பிறந்த நாள் முதல் 20 கிலோ அரிசி தருவேன் என்று புரட்சித்தலைவர் அறிவித்திருக்கிறார். கருணாநிதிக்கு அண்ணாவின் பிறந்தநாள் ஞாபகம் வராது தன் பிறந்தநாள் தான் ஞாபகத்திற்கு வரும்.

### அண்ணா பவளவிழா

தமிழகம் உள்ள அளவும் அண்ணாவின் புகழ் பரவ புரட்சித்தலைவர் நடவடிக்கை எடுத்து செயல்படுத்தி வருகிறார். நாம்தான் அண்ணா பிறந்த நாளை பவள விழாவாகக் கொண்டாடுகிறோம்.

காவல்துறை முன்பு போராட்டமாம்! பெற்ற மகன் செத்துக்கிடக்கிறான். பெற்ற மகனைக் கூட தன்மகன் என்று சொல்ல முடியாத நிலையை உருவாக்கிய கருணாநிதிதான் காவல்துறை முன்பு சட்டம்-ஒழுங்கு கெட்டு விட்டதாக போராடப் போகிறாராம். கருணாநிதி மறந்தாலும் மக்கள் மறந்துவிட மாட்டார்கள்.

நுழைவுத்தேர்வு பற்றி குறை சொல்கிறார் கருணாநிதி. தென்னை மரத்தைப் பார்த்தால் நல்லவனுக்கு தேங்காயின் ஞாபகம் வரும். கள் இறக்குபவனுக்கு கள்ளின் ஞாபகம் தான் வரும். அது போல் நுழைவுத் தேர்வு பிரச்சினையில் கருணாநிதியின் பார்வை நல்ல பார்வையாக இல்லை கள் இறக்குபவனின் பார்வையாகத்தான் இருக்கிறது.

கருணாநிதி ஆட்சிக் காலத்தில் பிற்பட்ட வகுப்பினர் முன்னேற என்ன நடவடிக்கை எடுத்தார்? முன்னேற்றப்பட்ட மக்களை எல்லாம் பிற்பட்டவர் பட்டியலில் சேர்த்து பிற்பட்டோரின் பட்டியலை அதிகரிக்கச் செய்து போட்டியை உருவாக்கியவர்தான கருணாநிதி.

புரட்சித்தலைவர் பிற்பட்ட மக்களை முன்னேற்ற பாடுபடுகிறார். கருணாநிதி முன்னேற்றப் பட்ட மக்களையும் பிற்பட்டவராக்கினார்.

கருணாநிதி என்ன தான் தமிழினமே - தமிழினமே என்று சொன்னாலும் மக்கள் அவரைப் புறக்கணிக்க முடிவெடுத்து விட்டனர்.

அடுத்த தேர்தலில் தி.மு.க. என்பது அழிந்து விட்ட இயக்கமாகிவிடும்.

இவ்வாறு மின் துறை அமைச்சர் பண்ருட்டியார் பேசினார்.

மற்றும் இக் கூட்டத்தில் இ. மதுசூதனன் எம்.எல். சி., டி. கே. கபாலி எம். எல். ஏ. மண்ணடி கிருஷ்ண மூர்த்தி, தரங்கை கண்ணன், எஸ். ஏ. பாலன், பாலகங்கா, மா. சு. மணி மற்றும் பலர் பேசினர்.

## பாகிஸ்தான் விமான விபத்து: கவர்னர் உயிர் ஊசல்

புதுடெல்லி, ஜூலை 7- பாகிஸ்தான் விமானம் ஒன்று விபத்துக்குள்ளாகி நொறுங்கியது. அதில் பயணம் செய்த பலுசிஸ்தான் மாநில கவர்னர் உடல்நிலை கவலைக்கிடமாக உள்ளது

பாகிஸ்தானில் உள்ள பலுசிஸ்தான் மாநில கவர்னர் லெப்டினன்ட் ஜெனரல் சிர்தார்சவுகத் பருக்லோதியும் மற்றும் சிலரும் ஒரு விமானத்தில் சென்றனர்.

பக்கார் மாவட்டம் மல்கேரா என்ற இடம் அருகே விமானம் சென்ற போது மோசமான வானிலை காரணமாக விமானம் தரையில் விழுந்து நொறுங்கியது.

கவர்னர் பருக்லோதி படுகாயமுற்றார். உடனடியாக அவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார். அவர் உடல்நிலைகவலைக்கிடமாக உள்ளது.

விமான ஓட்டி, அவரது சகா கவர்னரின் உதவியாளர் ஆகிய மூவரும் மரணம் அடைந்தனர்.

அவர்கள் பயணம் செய்த விமானம் சிறிய ரக விமானமாகும். 4 மாதங்களுக்குமுன்பு தான் கவர்னராக பருக்லோதி பதவி ஏற்றார்.

நேற்று இந்த விமான விபத்து நடந்ததாக பாகிஸ்தான் ரேடியோ இன்று (சனிக்கிழமை) அறிவித்தது.

சிறுவாணி பகுதியை

கேரள அமைச்சர்

## கங்காதரன்- அமைச்சர் ராகவானந்தம் நேரில் பார்வை

சென்னை, ஜூலை. 7- கோவை- சிறுவாணி பகுதியை அமைச்சர் ராகவானந்தமும், கேரள நீர்ப்பாசனத்துறைஅமைச்சர் கங்காதரனும் நாளை (8- ந்தேதி) சுற்றிப் பார்வையிடுகிறார்கள்.

### ஏல விற்பனை

1. R. Shanthilal Jain. No: 119 Paper mills Road ms. 82 (24-8-82 முதல் ஜனவரி 83 வரை ஏலத்தேதி 19-7-84 அன்று பகல் 11 மணிக்கும் 2 A Bhawarlal Jain, No: 33, பாலியம்மன் கோயில் தெரு சென்னை-49 (24-8-82 முதல் ஜனவரி 83 வரை) ஏலத்தேதி 19-7-84 அன்று மதியம் 1 மணிக்கும் .3 N Binjaram, 17, 3வது தெரு, நரசிம்மநாயக்கன் தெரு, புளியாந்தோப்பு, சென்னை-12 (24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 19-7-84 அன்று மதியம் 3 மணிக்கும். 4. SunderBai, 65. பேப்பர்மில்ஸ் ரோடு, சென்னை—11, (24-8-82 முதல் 83 மார்ச் வரை) ஏலத்தேதி 20-7-84 அன்று பகல் 11 மணிக்கும், 5) B. Rikab Chand Jain, 61, பேப்பர் மில்ஸ் ரோடு, பெரம்பூர், சென்னை - 11, (24-8-82 முதல், மார்ச் 83 வரை) ஏலத்தேதி 20-7-84 அன்று மதியம் 1 மணிக்கும், 6)S. Bhawarlal Sowcar, No: 91, மார்க்கெட் தெரு, சென்னை-11 (24- 8- 82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 20- 7- 84 அன்று மதியம் 3 மணிக்கும், 7. J. Tarachand Sharma கடை நம்பர் 2, மார்க்கெட் தெரு, எஸ். எச். பி. பில்டிங், டி. வி. சி. சென்னை-30 (24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 21-7-84 அன்று பகல் 11 மணிக்கும். 8.C.Premraj Jain 1, இருளப்பன் தெரு, சென்னை-79 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 21-7-84 அன்று மதியம் 2 மணிக்கும், (9) P. Tarachand Jain, 105, தெற்கு மாடத் தெரு, வில்லிவாக்கம், சென்னை-49 (24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 21-7-84 அன்று மதியம் 3 மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின், 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.



விமானம் கடத்தல்:

## காஷ்மீரில் 150 தீவிரவாதிகள் கைது

ஸ்ரீநகர், ஜூலை 7— காஷ்மீர் தலைநகர் ஸ்ரீநகரிலிருந்துவிமானத்தை கடத்திச் சென்ற சீக்கிய தீவிரவாதிகளுக்கு ஸ்ரீநகர் விமான நிலையத்தில் பணியாற்றும் சில பாதுகாப்பு அதிகாரிகளே உதவி செய்ததாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இதைத் தொடர்ந்து நேற்று தீவிர வாதிகளை வேட்டையாடும் வேலையில்காஷ்மீர்போலீசார் ஈடுபட்டனர்.

நேற்று 150 தீவிர வாதிகளை போலீசார் கைது செய்தனர்

இவர்களில் சிலர்பாகிஸ்தான் ஆதரவாளர் மற்றவர்கள் அகாலி தள சீக்கியர்கள் ஆவர்.

தமிழக அரசின் உதவியுடன்

## வைரக்கற்களை அறுத்து பட்டை தீட்ட திருச்சியில் பயிற்சி நிலையம்

திருச்சி, ஜூலை. 7. வைரக் கற்களை அறுக்கவும், பட்டை தீட்டி பாலிஷ் செய்யவும் பயிற்சி அளிக்க திருச்சியில் ஒரு பயிற்சி நிலையம் துவக்கப்பட்டுள்ளது.

இந்தப் பயிற்சி நிலையம் தமிழக அரசு உதவியுடன் துவக்கப்பட்டுள்ளது.

திருச்சி மாவட்டத்தில் செயற்கை வைரக்கற்களை அறுத்துப்பட்டை தீட்டும் பணியில் சுமார் 50 ஆயிரம் குடும்பங்கள் உள்ளன.

இந்தத் தொழிலில்நல்ல அனுபவத்தைப் பெற அவர்களுக்கு உதவவே இந்தப் பயிற்சி நிலையம் துவக்கப்படுகிறது.

சூரத்தில் இந்திய வைர இன்ஸ்டியூட் உள்ளது. வைரத்தை அறுத்துபட்டை தீட்டும் தொழிலில் அதிக மக்கள் ஈடுபட்டுள்ளனர் திருச்சியில் இந்தப்பயிற்சி நிலையத்தை அமைக்க அந்த இன்ஸ்டியூட் திட்டமிட்டுள்ளது.

வைரக்கற்களை அறுத்துப்பட்டை தீட்ட நவீன முறைகளை இந்தப் பயிற்சி நிலையம் பயிற்றுவிக்கும்.

தமிழகஅரசு உதவியுடன் இந்தப் பயிற்சி நிலையத்தை சூரத் வைர இன்ஸ்டியூட் அமைக்க திட்டமிட்டுள்ளது.